

**யாழ்.-கொழும்பு இரவு நேர இ.போ.ச. பஸ் சேவை மீள ஆரம்பம்**

காணாமல் போனவர்களை மீட்டு தருவதாகக் கூறி பணம் பறிக்கும் கும்பல் PAGE 3



**வடக்கு, கிழக்கின் பல பகுதிகளில் டெங்கு நோய்த் தாக்கம் அதிகரிப்பு**

காலநிலை மாற்றம், மழை காரணமாக டெங்கின் தாக்கம் வடக்கு, கிழக்கில் அதிகரிப்பு PAGE 4



**'மீள்குடியேற்றத்துக்கு தடையாக கண்ணிவெடிகள்'**

'மீண்டும் வாழ்வோம்' இதழுக்கு வழங்கிய விசேட செவ்வி PAGE 5



# மீண்டும் வாழ்வோம்

මීන්ඩුම් වාල්වෝම්

பக்கங்கள் Pages 8 | Vol 2 | No 48

இலவச பிரதி
Free Copy

Lifeline | Humanitarian Information For IDPs

17.01. 2010

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்


### இடம்பெயர்ந்தோர் வாக்களிக்க ஏதுவாக

# முகாம்களில் கொத்தணி வாக்குச்சாவடிகள்

*நமது நிருபர்*

இடைத்தங்கல் முகாம்களில் தங்கியுள்ள இடம்பெயர்ந்த மக்கள் எதிர்வரும் 26ம் திகதி இடம்பெறவுள்ள ஜனாதிபதித் தேர்தலில் வாக்களிப்பதற்கு ஏதுவாக கொத்தணி வாக்குச் சாவடிகள் நிறுவப்படும் என மீள்குடியேற்ற மற்றும் அனர்த்த நிவாரண சேவைகள் அமைச்சர் ரிஷாத் பதியுதீன் தெரிவித்துள்ளார். இதேவளை மீள்குடியேற்றப்பட்டவர்கள் தத்தம் இடங்களிலேயே வாக்களிக்கக் கூடியதாயிருக்கும் என்றும் அவர் கூறினார்.

மீள்குடியேற்றம், இடம்பெயர்ந்தோர் தொடர்பிலான வாழ்வாதார நடவடிக்கைகள் முதலான விடயங்கள் குறித்து ''மீண்டும் வாழ்வோம்'' இதழுக்கு வழங்கிய விஷேட செவ்வியிலேயே அமைச்சர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார்.

வடமாகாணத்தில் கண்ணிவெடி அகற்றப்பட்டுள்ள இடங்களில் பெருவாரியான மக்கள் மீள்குடியேற்றப்பட்டுள்ளதாகக் குறிப்பிட்ட அமைச்சர், கிளிநொச்சி மற்றும் முல்லைத்தீவு மாவட்டங்களிலுள்ள சில பிரதேசங்களில் மீள்குடியேற்றத்துக்குத் தடையாகக் கண்ணி வெடிகள் உள்ளதாகச் சுட்டிக் காட்டினார்.

இதேவேளை, மன்னாரிலுள்ள திருக்கேதீஸ்வரர் ஆலயம் புனரமைக்கப்பட்டு வருவதாகவும் எதிர்காலத்தில் இவ்வாலயத்தை பக்தர்கள் தடையின்றித் தரிசிப்பதற்கு ஆவன செய்யப்படும் என்றும் அமைச்சர் பதியுதீன் கூறினார்.

புத்தளத்தில் வசிக்கும் இடம்பெயர்ந்த முஸ்லிம் மக்கள் குறித்துக் கருத்துத் தெரிவித்த ரிஷாத் பதியுதீன், அரசாங்கத்தின் வாக்குறுதிப்படி அம்மக்கள் மே மாத இறுதிக்குள் மீள்குடியேற்றப்படுவர் என்றார்.

(விரிவான நேர்காணல்: 5ம் பக்கம்)



**வைப்பகப் படம்:** வளமான எதிர்காலமொன்றை மலர்ந்திருக்கும் புதுவருடம் கொண்டு வந்து சேர்க்கும் என்ற நம்பிக்கையோடு புன்னகைக்கும் இடம்பெயர்ந்த சிறுவர்கள்

### மீள்குடியேற்றப் பிரதேசங்களில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கு

## இடைக்கால கொடுப்பனவு வழங்கக் கோரிக்கை

*ஜெகதீஸ்வரி இராமசாமி*

வடக்கில் மீள்குடியேற்றப் பிரதேசங்களில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கு இடைக்கால கொடுப்பனவு ஒன்றை வழங்குமாறு இலங்கை ஆசிரியர் சங்கம் கோரிக்கை ஒன்றை கல்வி அமைச்சிடம் முன்வைத்துள்ளது. இதில் மீள்குடியேற்றப் பிரதேசங்களில் கடமையாற்றும் ஆசிரியர்களுக்கு போதிய வசதிகள் வழங்கப்பட வேண்டும் மற்றும் அவர்களுக்கு இடைக்கால கொடுப்பனவு ஒன்றை வழங்கவேண்டும் போன்ற காரணங்களை முக்கியத்துவப்படுத்தியே இந்த வேண்டுகோளானது முன்வைக்கப்பட்டுள்ளது என இலங்கை ஆசிரியர் சங்கச் செயலாளர் ஜோசப் ஸ்டாலின் தெரிவித்தார்.

இதேவேளை, இங்குள்ள ஆசிரியர்கள் போக்குவரத்து, உணவு, குடிநீர் மற்றும் தொற்று நோய்கள் போன்ற பல்வேறு பிரச்சினைகளுக்கு முகம்கொடுத்து வருகின்றனர். இதுபற்றி அந்தப்பிரதேசத்தில் பணிபுரியும் ஆசிரியர் ஜெயரூபன் கூறுகையில், 'எமது பாடசாலைக்கட்டடம் சேதமடைந்த நிலையில் உள்ளது. அதன் கீழ்தளத்தில்தான் தற்போது நாம் இயங்கிக்கொண்டிருக்கின்றோம். இதுபோன்ற பல்வேறு பிரச்சினைகளை நாம் எதிர்நோக்கி வருகின்றோம். போக்குவரத்து மற்றும் பொதுவான கொடுப்பனவுகள் கிடைப்பின் வரவேற்கத்தக்கது' எனத் தெரிவித்தார்.

# எழுநூறுக்கும் அதிகமான முன்னாள் போராளிகள் விடுவிக்கப்பட்டனர்

*ஏ. சொர்ணலிங்கம்*

முன்னாள் போராளிகள் சாதாரண வாழ்க்கைக்குத் திரும்பும் முகமாக அரசாங்கம் அவர்களை விடுதலை செய்யும் நடவடிக்கையில் ஈடுபட்டுள்ளது.

இந்த நடவடிக்கையின் ஒரு கட்டமாக அண்ணளவாக 700 பேர் வரையானோர் கடந்த வாரம் அரசினால் விடுவிக்கப்பட்டனர். இது தொடர்பாக புனர்வாழ்வுக்கான ஆணையாளர் நாயகம் மேஜர் ஜெனரல் தயா ரத்னாயக்க தெரிவிக்கும்போது, இவர்களில் பலர் போர் நடவடிக்கைகளில் நேரடியாகத் தொடர்புபடாதவர்கள் என்று தெரிவித்தார்.

'இதில் முக்கியமான விடயம் என்னவெனில், இவர்களில் கல்வி பயின்றுகொண்டிருந்தவர்கள் அவற்றைத் தொடரலாம். அதேபோல, தொழிற்பயிற்சி பெற்றுக்கொண்டிருந்தவர்களும் அவர்கள் பயற்சி பெற்றுக்கொண்டிருந்த இடங்களிலேயே அவற்றைத் தொடரலாம்' என அவர் மேலும் தெரிவித்தார்.

***அண்ணளவாக 11,000 பேர் வரையயான முன்னாள் போராளிகள் அரசினால் புனர்வாழ்வுக்கு உட்படுத்தப்படுகின்றனர்***

இதேபோன்று தமது வாழ்வாதாரத்தை ஆரம்பிக்க இருக்கும் மக்களுக்கான உதவிகளை அரசு மற்றும் வர்த்தகர்களின் உதவியுடன் மேற்கொள்ளும் என மேஜர் ஜெனரல் தயா ரத்னாயக்க கூறினார்.

அண்ணளவாக 11,000 பேர் வரையான முன்னாள் போராளிகள் அரசினால் புனர்வாழ்வுக்கு உட்படுத்தப்படுகின்றனர். அவர்கள் யாவரும் எதிர்வரும் காலங்களில் விடுதலை செய்யப்படுவார்கள் என நீதி மற்றும் சட்ட மறுசீரமைப்பு பிரதி அமைச்சர் வீ. புத்திரசிகாமணி தெரிவித்தார்.

'இவர்கள் அத்தனை பேரும் விடுவிக்கப்படவேண்டியவர்கள். அத்தனை பேரையும் சமூகத்திற்கு நற்பிரஜைகளாக சாதாரண மக்களுடன் வாழக்கூடியதாக அவர்களுக்குப் பயிற்சியளித்து, அவர்களைப் படிப்படியாக விடுதலை செய்வதற்கு ஏற்பாடுகள் செய்கின்றோம். அவர்கள் குடும்பங்களுடன் இணைந்து சுதந்திர புருஷர்களாக வாழக்கூடிய வாய்ப்பு ஏற்பட்டிருக்கின்றது. அநேகமாக, பன்னிரண்டு, பதின்மூன்று வயது முதல் இருபத்தைந்து வயது வரையானோர் இதில் அடங்குவார்கள்' என்று பிரதி அமைச்சர் புத்திரசிகாமணி மேலும் தெரிவித்தார்.

***பன்னிரண்டு, பதின்மூன்று வயது முதல் இருபத்தைந்து வயது வரையானோர் இதில் அடங்குவார்கள்***



# பூகோள அரங்கில் மனிதாபிமானப் பணிகள்

தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்

## ஈராக்

ஈராக்கில் இடம்பெற்றுவரும் வன்முறைச் சம்பவங்களினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு இவ்வாண்டில் பல்வேறு மனிதாபிமான உதவிகளை வழங்க எதிர்பார்ப்பதாக உள்ளூர் அரசசார்பற்ற நிறுவனங்கள் தெரிவித்துள்ளன. ஐ.நா அமைப்புக்கள் மற்றும் ஈராக் அரசுடன் இணைந்து இந்தப் பணிகளை முன்னெடுக்க எதிர்பார்ப்பதாகவும் அந்த நிறுவனங்கள் கூறியுள்ளன. இதேவேளை மனிதாபிமானப் பணிகளை முன்னெடுப்பதற்கு இந்த அமைப்புக்கள் உத்தியோகபூர்வமாக பதிவுசெய்வதோடு, கடந்த ஆண்டுக்கான கணக்கறிக்கைகளையும் சமர்ப்பிக்க வேண்டும் என ஐ.நா. அகதிகளுக்கான உயர்ஸ்தானிகராலயம் தெரிவித்துள்ளது.

## பாகிஸ்தான்

பாகிஸ்தான் அரசிற்கும் தலிபான் குழுவினர்களுக்கும் இடையில் இடம்பெற்று வரும் மோதல் காரணமாக பாகிஸ்தான் நாட்டு மக்களில் 2.3 மில்லியன் வரையிலானோர் இவ்வாண்டின் முற்பகுதி வரை இடம்பெயர்ந்திருப்பதாக ஐ.நா.வின் அவசர நிலைமைகளுக்கான பொறுப்பாளர் தெரிவித்துள்ளார்.

இடம்பெயர்ந்து முகாம்களிலும் உறவினர் வீடுகளிலும் உள்ளவர்களில் பெரும்பாலானோர் போசாக்கு குறைபாட்டுடன் காணப்படுவதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இதேவேளை இடம்பெயர்ந்திருப்பவர்கள் சிலர் தமது இருப்பிடங்களுக்கு மீளத் திரும்புவார்கள் என தாம் நம்புகின்ற போதிலும் பலர் தமது இருப்பிடங்களை இழந்து செல்வதற்கு வீடுகளற்ற நிலையில் இருப்பதாக ஐ.நா வின் மனிதாபிமான விவகாரங்களுக்கான ஒருங்கிணைப்பாளர் மேனுவல் பெஸ்லர் தெரிவித்துள்ளார்.

மேலும், தொடர்ச்சியாக இடம்பெயர்ந்து வரும் மக்களுக்கான உணவு, குடி நீர், கூடாரங்கள் போன்றவற்றை அமைத்துக்கொடுக்க போதிய நிதியின்மை ஏற்படசாத்தியக்கூறுகள் இருப்பதாகவும் பெஸ்லர் எச்சரிக்கை வெளியிட்டுள்ளார்.




## சூடான்

தென் சூடானிலுள்ள வுன்சாயி மாநிலத்தில் ஏற்பட்ட வன்முறைச் சம்பவங்கள் உக்கிரமடைந்துள்ள நிலையில் இந்நிலைமையை கட்டுப்படுத்துவதற்கு சர்வதேச சமூகத்தின் உடனடித் தலையீடு அவசியம் என 10 தொண்டு நிறுவனங்கள் தெரிவித்துள்ளன. இந்த வன்முறைச் சம்பவங்களினால் 140 பேர் உயிரிழந்துள்ளதுடன் 90 பேர் வரை காயமடைந்துள்ளதாக தென் சூடானிலுள்ள ஐ.நா.வின் வதிவிட மனிதாபிமான ஒருங்கிணைப்பாளர் லைஸ் கிராண்டி தெரிவித்துள்ளார். வன்முறைகள் இடம்பெறும் இடங்களுக்கு இவர் இரண்டு நாள் விஜயம் மேற்கொண்டு அங்குள்ள நிலைமையை நேரடியாக கண்டறிந்துள்ளதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

## பிலிப்பைன்ஸ்

பிலிப்பைன்ஸிலுள்ள மயோன் எரிமலை குமுறும் அபாயம் உள்ளதென அறிவிக்கப்பட்டதையடுத்து அதனையண்டிய பகுதிகளிலிருந்து இடம்பெயர்ந்த மக்கள் தமது சொந்த இடங்களை நோக்கி மீள் திரும்பிக் கொண்டிருக்கின்றனர் என தெரிவிக்கப்பட்டுள்ளது.

எரிமலை வெடிப்பதற்கான அபாயம் இல்லையென எரிமலைகள் தொடர்பான ஆராய்ச்சிகளை மேற்கொள்ளும் அமைப்பு அறிவித்ததையடுத்து மக்கள் தமது சொந்த இடங்களை நோக்கி திரும்பிய வண்ணமுள்ளனர்.

இடைத்தங்கல் முகாம்களில் தங்கியிருந்த சுமார் 50ஆயிரம் பேர் மணிலாவின் தென் கிழக்கு பகுதியிலுள்ள அல்பே மாநிலத்திலுள்ள தமது இருப்பிடங்களில் மீளக் குடியேறியுள்ளதாகக் கூறப்படுகின்றது.

## முச்சக்கர சைக்கிள் இழுவை வண்டி தொடர்பான தகவல்கள்



பக்கவாட்டுத் தோற்றம்



பின்புறத் தோற்றம்



மேற்புறத் தோற்றம்

இது முழுவதும் உள்ளூரில் தயாரிக்கப்பட்ட மூலப்பொருட்களையும் சைக்கிள் உதிரிப் பாகங்களையும் கொண்டு தயாரிக்கப்பட்ட 20 விட்டமுடைய மூன்று சக்கரங்களைக் கொண்ட போக்குவரத்துச் சாதன வகையாகும். இதனை இயக்குவது சுலபமாக இருப்பதோடு, 200 கிலோகிராம் நிறையுடைய பொதியினையும் கொண்டு செல்லக்கூடியது.

**சட்டவடிவமும் மூலப்பொருட்களும்**

இதற்கு 1 X 1½” இரும்பும் 1 X 1 சட்டமும்,GI தொட்டி உரு மற்றும் மென்மையான இரும்புத் தகடுகளும் பாவிக்கப்படுகின்றன. இதனை அமைப்பதற்கு முழுமையாக மின்சாரம் பாவிக்கப்படும்.

**அனுகூலங்கள்:**

சுய தொழிலில் ஈடுபடுபவர்களுக்கு சுதேசிய முறையிலான இந்தப் போக்குவரத்து சாதனம் பல்வேறு பிரயோசனங்களை அளிக்கிறது.

**அவை:**

- பேக்கரி உற்பத்திகளை ஏற்றியிறக்குவதற்கு பாவிக்கப்படும்.
- நடமாடும் வியாபாரத்தை ஆரம்பிப்பதற்கு உதவும்.
- ஒரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு சாதாரண அளவைக் கொண்ட ஒரு பொருளை ஏற்றியிறக்குவதற்கு உதவும். அத்துடன் சிறிய மாற்றங்களை ஏற்படுத்தி இதனை இன்னும் பல தேவைகளுக்குப் பாவிக்க முடியும். இதனை இயக்குவதற்கு ஒருவர் சிறிது பயிற்சி பெற வேண்டியது அவசியம். இந்த இலகு பாவனைச் சாதனத்திற்கு அதிக பராமரிப்புச் செலவும் தேவைப்படாது. சிறிய கம்மாலையில் இதற்கான திருத்த வேலைகளையும் மேற்கொள்ள முடியும்.

### தொழில்நுட்ப அளவீடுகள்

- **கொள்ளளவு:** 200 கிலோகிராம்
- **சக்கரம் (பின்) :** 1473 மிமீ
- **பாரம் :** 45 கிலோகிராம்
- **முச்சக்கர வண்டியின் அளவு :** 2210 X 879 X 975 மிமீ
- **இழுவை வண்டியின் அளவு :** 899 X 559 X 394 மிமீ




PRACTICAL ACTION

## ‘மீண்டும் வாழ்வோம்’ வானொலி நிகழ்ச்சி

**‘மீண்டும் வாழ்வோம்’’ வானொலி நிகழ்ச்சி நவம்பர் மாதம் தொடக்கம் புதிய பல அம்சங்களுடன் இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபனத்தின் தேசிய சேவையில் திங்கள் முதல் வெள்ளிவரை இரவு 9.30 முதல்10.00மணி வரையும் கிழக்கு மாகாணத்தில் பிறை எப்.எம்.வானொலியில் ஞாயிற்றுக் கிழமைகளில் பிற்பகல் 1.30 மணி முதல் 2.00 மணிவரையும் ஒலிபரப்பாகவுள்ளது. எமது நிகழ்ச்சி ஒலிப்பதிவுகளையும் இப்பத்திரிகையையும்** http://lifeline.internews.lk/ **என்ற இணையத்தளத்தில் தரவிறக்கம் செய்யலாம்.**



எமது நிகழ்ச்சிகள் குறித்த உங்களது கருத்துக்களை எழுதியனுப்புங்கள்.

## நெருப்பு பாதுகாப்பு



# யாழிலிருந்து கொழும்புக்கு இரவு நேர இ.போ.ச. பஸ் சேவை மீள ஆரம்பம்

*நிரஞ்சனி ரோலண்ட்*

யாழ்ப்பாணத்திலிருந்து கொழும்புக்கான இரவு நேர இ.போ.ச பஸ்சேவை கடந்த ஞாயிற்றுக்கிழமை ஆரம்பிக்கப்பட்டது. 1990ஆம் ஆண்டுக்கு பின்னர் யாழ்-கொழும்பு வரையான இரவு நேர பஸ் சேவைகள் ஆரம்பிக்கப்பட்டமை இதுவே முதற் தடவை யாகும்.

கடந்த ஜுலை மாதம் முதல் ஏ-9 வீதியினூடாக மதவாச்சி வரையான இ.போ.ச பஸ் சேவைகள் ஆரம்பிக்கப்பட்டன. அதேபோல்

**மீள்குடியேற்றங்கள் இடம் பெற்ற கிளிநொச்சி, மாங்குளம், கனகராயன்குளம் ஆகிய இடங்களில் தரித்து பிரயாணிகளை ஏற்றிச் செல்லும்**

கடந்த நவம்பர் மாதம் முதல் கொழும்பு வரையான பகல் நேர இ.போ.ச பஸ் சேவைகள் ஆரம்பிக்கப்பட்டன.

யாழ். பேருந்து நிலையத்திலிருந்து இரவு 9.00 மணிக்கு பயணத்தை ஆரம்பிக்கும் இந்த பஸ்கள் அதிகாலை 5.00 மணிக்கு கொழும்பு மத்திய பஸ் நிலையத்தை வந்தடையும் என வட பிராந்திய இலங்கை போக்குவரத்து சபையின் பிரதான பிரதேச பொதுமுகாமையாளர் கணபதிப்பிள்ளை கணேசபிள்ளை தெரிவித்தார்.

இது தொடர்பாக அவர் மேலும் தெரிவித்ததாவது -

முதல் முறையாக ஒரு பேருந்தை சேவையில் ஈடுபடுத்தலாம் என்ற திட்டத்துடன் இதனை ஆரம்பித்தோம். ஆனால், பயணிகளின் எண்ணிக்கை அதிகரித்ததையடுத்து யாழ். பேருந்து நிலையத்திலிருந்து இரவு 9.00 மணிக்கு மூன்று இ.போ.ச. பஸ்கள் சேவையை ஆரம்பித்தன. யாழ் - கொழும்புக்கான முதலாவது பயணத்தின்போது மொத்தமாக 146 பயணிகள் தமது பயணத்தை மேற்கொண்டனர். அதேபோல், இரவு சேவை ஆனபடியினால் யாழிலிருந்து புறப்பட்டு கொடிகாமம் வரையான பஸ் நிலையங்களில் பயணிகள் இருப்பின் அவர்களையும் ஏற்றிக்கொண்டு புறப்படும். ஆனால், கிளிநொச்சிக்கு அப்பால் மிரிசுவிலிலிருந்து எந்தவொரு பேருந்து நிலையத்திலும் தரித்து நிற்காது. ஏனெனில், அப்பகுதிகளில் மீள்க்குடியேற்றங்கள் இடம் பெறவில்லை. இருப்பினும், மீள்குடியேற்றங்

**யாழ். பேருந்து நிலையத்திலிருந்து இரவு 9.00 மணிக்கு பயணத்தை ஆரம்பிக்கும் இந்த பஸ்கள் அதிகாலை 5.00 மணிக்கு கொழும்பு மத்திய பஸ் நிலையத்தை வந்தடையும்**



■ **வைப்பகப்படம்:** யாழ்.- கொழும்பு ஏ9 பாதையூடாக பயணிக்கும் பயணிகள்

கள் இடம்பெற்ற கிளிநொச்சி, மாங்குளம், கனகராயன்குளம் ஆகிய இடங்களில் தரித்து பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் என்றார்.

பல வருடங்களுக்குப் பின்னர் யாழ் - கொழும்பு வரையான இரவு நேர பஸ் சேவையில் பிரயாணிப்பதற்கு சந்தர்ப்பம் கிடைத்ததையிட்டு தான் மகிழ்ச்சியடைவதாக மானிப்பாயைச் சேர்ந்த நியூட்டன் தெரிவித்தார். இது தொடர்பாக அவர் மேலும் தெரிவிக்கையில், இரவு நேர பஸ் சேவையின் மூலம் நாம் அமைதியான முறையில் இலகுவாகப் பயணிக்கக் கூடியதாக இருக்கின்றது. பாதுகாப்புக் கெடுபிடிகளின்றி அமைதியாகச் செல்லலாம். அதேபோல், இந்த சேவையானது நீண்ட நாட்களுக்கு தொடர்ந்து இருக்க வேண்டும் என்றார்.

## உங்கள் எண்ணங்களை எமக்குத் தெரிவியுங்கள்

*அன்பார்ந்த வாசகர்களே,*

*''மீண்டும் வாழ்வோம்'' தகவல் இதழானது இடம்பெயர்ந்து இடைத்தங்கல் முகாம்களில் வாழும் உங்களது நலன் கருதி வாரம் தவறாமல் வெளிவந்து கொண்டிருப்பதை அறிவீர்கள்.*

*இடம்பெயர்ந்தோர் தொடர்பிலான அரச மற்றும் அரச சார்பற்ற நிறுவனங்களின் முன்னெடுப்புகள், உங்கள் வாழ்வை மீளக்கட்டியெழுப்பக் கூடிய வாழ்வாதாரத் தகவல்கள் எனப் பலதரப்பட்ட விடயங்களையும் காத்திரமான முறையில் உங்களிடம் சேர்ப்பிக்கும் பணியை ''மீண்டும் வாழ்வோம்'' செய்து வருகிறது.*

*மெனிக்பாமிலுள்ள இடம்பெயர்ந்த மக்கள் யாவரையும் ஜனவரி மாத இறுதிக்குள் மீள்குடியேற்றவிருப்பதாக அரசாங்கம் அறிவித்துள்ள நிலையில், அதன் பிறகான காலங்களிலும் உங்களது வாழ்நிலை மேம்பாட்டுக்கு உதவக் கூடிய தகவல்களைத் தரவேண்டிய அவசியம் தொடர்ந்தும் இருப்பதாகவே நாம் நம்புகிறோம்.*

*இது தொடர்பில் நீங்கள் எமக்கு எழுதி அனுப்பக்கூடிய கருத்துகள் மிகுந்த பயன்பயக்குவதாய் அமையும்.*

*கீழ்க்காணும் விடயங்கள் தொடர்பில் உங்களது அபிப்பிராயங்களை எமக்கு எழுதியனுப்புங்கள்:*

- *''மீண்டும் வாழ்வோம்'' இதழ் மற்றும் வானொலி நிகழ்ச்சி என்பன இதுவரை காலமும் உங்களுக்கு வழங்கி வந்த தகவல்களால் நீங்கள் பயனடைந்துள்ளீர்களா? எவ்வகையான பயன்கள்?*
- *நீங்கள் மீள்குடியமரும் இடங்களில் ''மீண்டும் வாழ்வோம்'' இதழ் கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறீர்களா?*
- *நீங்கள் எழுத்துத்துறை/இதழியல்துறையில் ஆற்றல்/ஆர்வம் உள்ள பாடசாலை/பல்கலைக் கழக மாணவரா? அவ்வாறாயின் ''மீண்டும் வாழ்வோம்'' இதழுக்கு பங்களிக்க விரும்புகிறீர்களா? (ஆர்வமுள்ளவர்கள் உங்கள் சுயவிபரங்களை எமக்கு அனுப்பி வைக்கலாம். தேவைப்படுமிடத்து நாம் உங்களைத் தொடர்பு கொள்வோம்)*

## 'சிறுவர் உதவி இணைப்பு' செயற்றிட்டம்

வவுனியா மாவட்ட செயலகத்தின் குடும்ப உறவுகளைத் தேடும் பிரிவின் (Family Tracing Unit) ஒரு பகுதியாக 'சிறுவர் உதவி இணைப்பு' (Helpline for Children) மாவட்டத்தின் அரசாங்க அதிபர் திருமதி.பி.எஸ்.எம்.சார்ள்ஸ் இனால் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

குடும்பங்களிலிருந்து பிரிந்த சிறுவர்களை மீள இணைத்தல், சிறுவர் துஷ்பிரயோகத் தடுப்பு முதலான விடயங்கள் இப்பிரிவினால் கையாளப்படும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

நன்னடத்தைச் சிறுவர் பராமரிப்புத் திணைக்களத்தோடு இணைந்து வவுனியா மாவட்ட செயலகம் முன்னெடுக்கும் இச் செயற்றிட்டத்துக்கு யுனிசெப் உதவி வழங்குகின்றது.

**024 222 55 66**



தற்போதைக்கு வார நாட்களில் காலை 8.30 இலிருந்து மாலை 5.30 மணிவரை இந்த் தொடர்பிலக்கம் சேவையிலிருக்கும் எனத் தெரிவிக்கப்படுகிறது.




**உங்களின் வாக்கு உங்களின் அரசியலமைப்பு உரிமை. பயன்படுத்துங்கள்.**

இத் தகவலை உங்களுக்கு வழங்குபவர்கள் மாற்றுக் கொள்கைகளுக்கான நிலையம்






நிதி அனுசரணை ஐரோப்பிய ஒன்றியம்

# வடக்கு, கிழக்கின் பல பகுதிகளில் டெங்கு நோய்த் தாக்கம் அதிகரிப்பு

*எஸ். நிஸாம் எம். ஸுஹைல்*

தற்போது ஏற்பட்டுள்ள காலநிலை மாற்றம் மற்றும் வடகீழ் பருவக்காற்று மழை காரணமாக டெங்கு நோயின் தாக்கம் நாட்டின் வடக்கு, கிழக்கு பகுதிகளில் அதிகரித்துக் காணப்படுவதாக இலங்கை தொற்று நோய் தடுப்புப் பிரிவு தெரிவித்துள்ளது.

இலங்கையில் டெங்குக் காய்ச்சல் காரணமாக இதுவரை 334ற்கும் மேற்பட்டோர் உயிரிழந்துள்ளனர். அதேவேளை, 34,659ற்கும் அதிகமானோர் இந்நோய்ப் பாதிப்புக்கு உள்ளாகியுள்ளதாக அடையாளம் காணப்பட்டுள்ளது.

யாழ். மாவட்டத்தில் கடந்த ஒக்டோபர் மாதத்தில் இனங்காணப்பட்ட டெங்கு நோய் டிசம்பர் மாதத்திற்குப் பிறகு தீவிரமாகப் பரவிவருவதாக யாழ்.மாவட்ட பிராந்திய சுகாதாரப் பணிப்பாளர் ஆ. கேதீஸ்வரன் தெரிவித்தார்.

அவர் மேலும் கூறுகையில், இந்நோய்த் தொற்றுக்கு உள்ளானதால் அங்கு இது வரை 17 பேர் உயிரிழந்துள்ளனர். பலியானவர்களில் சிறுவர்கள் 10ற்கும் அதிகமானோர். அத்துடன் 500ற்கும் மேற்பட்டோருக்கு நோய் தொற்றியுள்ளது. குறிப்பாக யாழ்.மாநகர சபைப் பிரதேசம், மானிப்பாய், சண்டிலிப்பாய், சுதுமலை, சுன்னாகம், உடுவில் போன்ற பிரதேசங்களிலேயே அதிகமாக டெங்கு நோய் பரவி வருகின்றது. அதனைத் தடுப்பதற்கு மாவட்ட டெங்கு ஒழிப்புக் குழு ஒன்று அமைக்கப்பட்டு, இதன் மூலம் ஒவ்வொரு திணைக்களங்கள், நிறுவனங்களுக்கும் அவற்றுக்கான பணிகள் ஒதுக்கி, அது பற்றி விளக்கிக் கூறப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிரதேச மட்டத்திலும் ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. அவற்றினூடாகவும் டெங்கு ஒழிப்பு வேலைத் திட்டங்களை செய்கின்றோம். கடந்த வாரத்தை நாங்கள் டெங்கு ஒழிப்பு வாரமாக அறிவித்து சிரமதானப்பணிகள் செய்தோம். பாடசாலைகளும் இதில் உள்வாங்கப்பட்டது என்றார்.

***இலங்கையில் டெங்குக் காய்ச்சல் காரணமாக இதுவரை 334ற்கும் மேற்பட்டோர் உயிரிழந்துள்ளனர். அதேவேளை, 34,659ற்கும் அதிகமானோர் இந்நோய்ப் பாதிப்புக்கு உள்ளாகியுள்ளதாக அடையாளம் காணப்பட்டுள்ளது.***

டெங்கு நுளம்பினால் வவுனியா பெரும் பாதிப்பை எதிர்கொண்டுள்ளதாகவும் கடந்த வருடம் ஆகஸ்ட் மாதமளவில் அங்கு டெங்கு நோய் இனங்காணப்பட்டது எனவும் வட மாகாண மேலதிக சுகாதாரப் பணிப்பாளர் வைத்தியர் சத்திய மூர்த்தி தெரிவித்தார்.

அவர் தொடர்ந்தும் தெரிவிக்கையில், இது வரை 1122 பேர் நோய் தொற்றுக்குள்ளாகியதோடு 22ற்கும் மேற்பட்டோர் இறந்தும் உள்ளனர். டிசம்பர் மாதத்தில் மட்டும் இங்கு 795 பேர் டெங்கு நோய்த் தொற்றுக்கு உள்ளாகியுள்ளனர்.



டெங்கு நோயாளி ஒருவர்

டெங்கு பரவும் இடங்களை அகற்றுவதற்குரிய விழிப்புணர்வு நடவடிக்கைகளை மேற்கொள்கின்றோம். பொது மக்கள் தங்களுடைய சொந்தக் காணிகளையும் அயல் பிரதேசங்களையும் நுளம்பு பரவக்கூடிய இடங்களாக வைத்திருந்தார்கள். இதனால்தான் இவ்வளவு வேகமாக டெங்கு நோய் பரவியது. இப்போது பொது மக்களிடையே விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது என தெரிவித்தார்.

***டெங்கு நுளம்பினால் வவுனியா பெரும் பாதிப்பை எதிர்கொண்டுள்ளதாகவும் கடந்த வருடம் ஆகஸ்ட் மாதமளவில் அங்கு டெங்கு நோய் இனங்காணப்பட்டது எனவும் வட மாகாண மேலதிக சுகாதாரப் பணிப்பாளர் வைத்தியர் சத்திய மூர்த்தி தெரிவித்தார்.***

மட்டக்களப்பு மாவட்டத்தில் நகர்ப் பகுதியில் 301 நோயாளர்களும் அதற்கு அடுத்தபடியாக காத்தான்குடி பிரதேசத்தில் 127 பேரும் களுவாஞ்சிக்குடியில் 85 பேரும் ஏறாவூரில் 52 நோயாளர்களும் ஓட்டமாவடி, வாழைச்சேனை பிரதேசங்களில் 73 பேரும் மட்டக்களப்பு மாவட்டத்தின் ஏனைய பிரதேசங்களை இணைத்து மொத்தமாக 660ற்கும் அதிகமானோர் இந்த நோய்த்தெற்றுக்கு உள்ளாகியுள்ளனர் என அம்மாவட்ட பிராந்தியத் தொற்று நோய் தடுப்புப் பிரிவின் செயலாளர் எஸ். தட்சனாமூர்த்தி குறிப்பிட்டார்.

டெங்கு நோயினால் இறந்தவர்கள் பற்றியும் அப்பகுதிகளில் நோயினைத் தடுப்பதற்கும் முன்னெடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகள் பற்றியும் அவரிடம் கேட்ட போது, மட்டக்களப்பு நகர்ப் பகுதியில் 7 பேர் அடங்கலாக இதுவரை டெங்கு நோய் தெற்றுக்குள்ளாகி உயிரிழந்தவர்களின் எண்ணிக்கை 11 எனவும் அதனைக் கட்டுப்படுத்த நடவடிக்கை எடுத்திருப்பதாகவும் கூறினார். 'ஒலி பெருக்கியூடாக அறிவுறுத்தல்களும் விழிப்புணர்வு நடவடிக்கைகளும் செய்து வருகின்றோம். அடுத்த வாரமளவில் நோய்த்தொற்று கட்டுப்பாட்டுக்குள் வராவிட்டால் நுளம்பு பரவ விடுபவர்களுக்கு எதிராக வழக்கு தாக்கல் செய்வோம் எனக் கூறினார்.

புத்தளம் மாவட்டத்தில் இதுவரை 786 டெங்கு நோயாளர்கள் இனங்காணப்பட்டுள்ளனர். டிசம்பர் மாதத்தில் 153 நோயாளர்கள் இனங்காணப்பட்டிருந்தனர். ஜனவரி முதல் இன்று வரை 60 நோயாளர்கள் அடையாளம் காணப்பட்டுள்ளதாகப் புத்தளம் மாவட்ட சுகாதார வைத்திய அதிகாரி எஸ். என்.எம். தஸ்லீம் தெரிவித்தார்.

அவர் மேலும் தெரிவிக்கையில், ஜனவரி 4ஆம் திகதி 15 நோயாளர்களும் 5ஆம் திகதி 16 நோயாளர்களும் 6ஆம் 7ஆம் திகதிகளில் 10 நோயாளர்களும் 8ஆம் திகதி 5 நோயாளர்களும் 9ஆம் திகதி 6 நோயாளர்களும் 10 ஆம் திகதி 4 நோயாளர்களும் 11 ஆம் திகதி 2 நோயாளர்களுமாக டெங்கு நோயாளர்களின் எண்ணிக்கை குறைந்து வருகின்றது. இதற்கான காரணம் அங்கு நடத்தப்பட்ட விழிப்புணர்வு நடவடிக்கைகளும் சுத்தப்படுத்தல் நடவடிக்கைகளுமாகும் என்றார்.



டெங்கு நுளம்பை ஒழிப்பதற்கு செலுத்தப்படும் நச்சுப்புகை

## டெங்கு நோயால் பாதிக்கப்பட்டவர்களின் விபரங்கள் - பிரதேச ரீதியாக

| இடங்கள் | ஜனவரி | பெப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | ஜூன் | ஜூலை | ஆகஸ்ட் | செப்டெம்பர் | ஒக்டோபர் | நவம்பர் | டிசம்பர் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| யாழ்ப்பாணம் - | 3 | 3 | 2 | 0 | 0 | 1 | 1 | 2 | 6 | 19 | 33 | 316 | 386 |
| மன்னார் - | 2 | 1 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 13 | 19 |
| வவுனியா - | 4 | 0 | 0 | 0 | 3 | 4 | 2 | 8 | 45 | 98 | 163 | 795 | 1122 |
| மட்டக்களப்பு - | 12 | 62 | 120 | 45 | 65 | 75 | 80 | 38 | 29 | 31 | 9 | 94 | 660 |
| அம்பாறை - | 4 | 9 | 11 | 12 | 33 | 71 | 59 | 8 | 5 | 10 | 20 | 22 | 264 |
| திருமலை - | 8 | 33 | 18 | 82 | 71 | 57 | 44 | 5 | 4 | 6 | 10 | 39 | 377 |
| புத்தளம் - | 14 | 11 | 23 | 12 | 57 | 156 | 173 | 79 | 29 | 44 | 38 | 150 | 786 |

# 'மீள்குடியேற்றத்துக்குத் தடையாக கண்ணிவெடிகள் உள்ளன'

*வடக்கில் தற்போது மேற்கொள்ளப்படும் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் மற்றும் மீள்குடியேற்றப்படும் மக்கள் தேர்தலில் வாக்களிப்பதற்கான ஏற்பாடுகள் குறித்த கேள்விகளுக்கு விளக்கமளிக்கின்றார் அனர்த்த முகாமைத்துவ மற்றும் மீள்குடியேற்ற அமைச்சர்* **ரிஷாத் பதியுதீன்**



செவ்வி

நிரஞ்சனி ரோலண்ட் INTERVIEW

**வடக்கில் தற்போது முன்னெடுக்கப்படும் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் குறித்துத் தெரிவிக்க முடியுமா?**

வட மாகாணத்தில் கண்ணிவெடிகள் அகற்றப்பட்டுள்ள இடங்களில் தற்போது மக்கள் மீளக்குடியேற்றப்பட்டுவிட்டனர். முல்லைத்தீவு மற்றும் கிளிநொச்சி மாவட்டங்களிலுள்ள சில பகுதிகளில் இடம்பெயர்ந்த மக்களை மீளக்குடியேற்றுவதற்கு மிதிவெடிகள் தடையாக உள்ளன. மிதிவெடிகளை அகற்றும் பணிகள் பூர்த்தியாக்கப்பட்ட பின்னர் இந்த மக்கள் அங்கு மீளக்குடியேற்றப்படுவார்கள். இன்னும் ஒரு இலட்சம் பேர் வரை நலன்புரி நிலையங்களில் உள்ளனர். அவர்களில் 20ஆயிரம் பேர் தமது உறவினர்கள், நண்பர்களைத் தேடி வெளியே சென்றுள்ளனர். ஏனையவர்கள் தற்போது நிவாரணக்கிராமங்களில் தங்கியுள்ளனர்.

**மீள்குடியேற்றப்படும் மக்களின் வாழ்வாதாரங்களைக் கட்டியெழுப்புவதற்கு அரசினால் மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் குறித்துத் தெரிவிக்க முடியுமா?**

*மன்னார் மாவட்டத்தின் மடு ஆலயம் புனரமைக்கப்பட்டது. அதேபோல், திருக்கேதீஸ்வரம் ஆலயத்தையும் புனரமைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்கின்றோம்*

அரசாங்கமும் மாகாண சபைகளும் இணைந்து மீளக்குடியேற்றப்படும் மக்களின் வாழ்வாதாரங்களைக் கட்டியெழுப்புவதற்கான நடவடிக்கையை மேற்கொண்டு வருகின்றன. அதேவேளை, இது தொடர்பில் அரசசார்பற்ற நிறுவனங்களின் உதவிகளையும் பெற்றுள்ளோம். குறிப்பாக விவசாயத்தில் ஈடுபடும் மக்களின் விவசாய கட்டமைப்பை வளப்படுத்துவதற்கும் கடற்றொழிலாளர்களின் கடற்றொழிலை மேம்படுத்துவதற்குமான ஆக்கபூர்வமான நடவடிக்கைகளையும் நாம் மேற்கொண்டு வருகின்றோம்.

**வவுனியா நலன்புரி முகாம்களில் தமக்குக் கிடைக்கும் நிவாரணப் பொருட்களை விற்றுப் பணமாக்கி தமது ஏனைய தேவைகளை மக்கள் பூர்த்தி செய்துகொள்வதாகத் தெரிவிக்கப்படுகின்றது. இது குறித்து உங்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளதா?**

நிவாரணப் பொருட்கள் அவர்களின் தேவைகளுக்கு அதிகமாக இருக்கும் பட்சத்தில் அவற்றை மக்கள் விற்றால் அதனைத் தடுக்கும் உரிமை எமக்கில்லை. பொருட்கள் தேவைக்கதிகமாக இருப்பதால் அவர்கள் அவ்வாறு செய்வதாக எமக்கும் தகவல்கள் கிடைக்கின்றன.

**இந்த மக்களின் ஏனைய தேவைகள் முகாம்களில் பூர்த்தி செய்யப்படாமையே இதற்கான காரணமா?**

அப்படிக் கூற முடியாது. முகாம்களில் அவர்களின் தேவைகளுக்கான உணவு மற்றும் ஏனைய பொருட்களை நாம் வழங்குகின்றபோது அவை மேலதிகமாக இருந்தால் அவை அவர்களுக்குத் தேவையில்லையென அவர்கள் உணர்கின்ற போது அதனை விற்பனை செய்வதைப் பிழையாகப் பார்க்க முடியாது.

**வடக்கிலிருந்து பலாத்காரமாக வெளியேற்றப்பட்ட முஸ்லிம் மக்களின் மீள்குடியேற்ற நடவடிக்கைகளின் தற்போதைய நிலைமை குறித்துக் கூற முடியுமா?**

ஆம். ஜனாதிபதி அவரது வெற்றிக்குப் பின்னர் எதிர்வரும் மே மாதத்திலிருந்து இவர்கள் மீளக்குடியேற்றப்படுவார்கள் என கூறியுள்ளார். அந்தவகையில் இந்த மக்களின் குடியேற்றம் என்பது திட்டமிட்ட முறையில் நடைபெற வேண்டும் என நாம் ஜனாதிபதியிடம் வலியுறுத்தியுள்ளோம். அதற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டு வருகின்றன. காரணம் 20 வருடங்களானதால் அந்தப் பகுதிகள் காடுகளாகிவிட்டன. அவற்றை அழித்து பாதைகள், மின்சாரம், பாடசாலை மற்றும் ஏனைய உட்கட்டமைப்பு வசதிகளுடன் தான் இந்த மக்களை மீளக்குடியமர்த்த வேண்டும். எனவே அதற்கான ஆக்கபூர்வமான நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றோம்.

*ஒரு இலட்சம் பேர் வரை நலன்புரி நிலையங்களில் உள்ளனர். அவர்களில் 20ஆயிரம் பேர் தமது உறவினர்கள், நண்பர்களைத் தேடி வெளியே சென்றுள்ளனர்.*

**இடம்பெயர்ந்த மக்கள் தேர்தலில் வாக்களிப்பது தொடர்பில் எவ்வாறான ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன?**

இடம்பெயர்ந்த அனைத்து மக்களுக்கும் பகிரங்கமான அழைப்பு விடுக்கப்பட்டது. இவர்களுக்கான புதிய வாக்குச்சாவடிகளை அமைப்பதற்கான ஏற்பாடுகளைத் தேர்தல் செயலகம் மேற்கொண்டுள்ளது. முகாம்களில் கொத்தணி வாக்குச்சாவடிகள் அமைக்கப்படவுள்ளன.

**மீள்குடியேற்றப்படும் மக்கள் வாக்களிப்பதற்காக எவ்வாறான ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன?**

மீள்குடியேற்றப்படும் மக்களுக்கு அவர்களின் ஊர்களிலேயே வாக்குகளைப் போடுவதற்கான வசதிகள் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளது. இவர்கள் சாதாரண முறையில் வாக்களிக்கலாம்.

**கடந்த ஞாயிற்றுக்கிழமை 715 முன்னாள் போராளிகள் பெற்றோரிடம் ஒப்படைக்கப்பட்டனர். ஏனையவர்களை ஒப்படைப்பதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றதா?**

நிச்சயமாக இன்னும் ஒரு வருடத்தில் மிகுதியாக உள்ளவர்கள் அவர்களின் பெற்றோர்களிடம் கௌரவமாக ஒப்படைக்கப்படுவார்கள். அதற்கான உளப்பயிற்சிகளை அவர்களுக்கு அளித்து வருகின்றோம். கட்டம் கட்டமாக இவர்கள் விடுவிக்கப்படுவதுடன், ஒரு வருடத்திற்குள் இவர்கள் அனைவரும் விடுவிக்கப்படுவார்கள்.

**புத்தளத்திலிருந்து மன்னார் வரையான நேரடி வீதி போக்குவரத்திற்காகத் திறக்கப்படுவதாகத் தகவல்கள் வெளியாகியுள்ளன. இந்த வீதி எப்போது திறக்கப்படும்?**

போக்குவரத்துக்காக இந்தப் பாதைகள் திறந்துவிடப்படும் என பசில் ராஜபக்ஷ புத்தள மக்களுக்கு தெரிவித்திருந்தார். அந்த வகையிலேயே அந்தப் பாதையை மிக விரைவாகத் திறப்பதற்கான ஏற்பாடுகளை செய்துகொண்டிருக்கின்றோம். ஆனால், அந்தப் பாதை மிக மோசமாக இருப்பதாக நான் அறிகின்றேன். இன்னும் ஓரிரு நாட்களில் நான் அந்தப் பாதைகளில் செல்வதற்கான ஏற்பாடுகளை மேற்கொண்டு வருகின்றேன்.

**திருக்கேதீஸ்வரம் ஆலயம் விரைவாகத் திறக்கப்படும் என கூறப்படுகின்றது. அதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றதா?**

ஆம், மன்னார் மாவட்டத்தின் மடு ஆலயம் புனரமைக்கப்பட்டது. அதேபோல், திருக்கேதீஸ்வரம் ஆலயத்தையும் புனரமைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்கின்றோம். எனவே, இவை இரண்டையும் அழகான முறையில் புனரமைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்கின்றோம். புனித ஸ்தலங்களை மக்கள் சென்று பார்க்கும் விதத்தில் மடு வீதியைத் திறந்துவிட்டுள்ளோம்.

*மீள்குடியேற்றப்படும் மக்களுக்கு அவர்களின் ஊர்களிலேயே வாக்குகளைப் போடுவதற்கான வசதிகள் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளது*

**கிளிநொச்சி மாவட்டத்திலுள்ள பாடசாலைகளை மீளத் திறப்பதற்கான ஏற்பாடுகள் மேற்கொள்ளப்படுவதாகக் கூறப்படுகின்றது. அந்தப் பணிகள் எவ்வாறு நடைபெறுகின்றன?**

அந்த மக்கள் மீளக்குடியேற்றப்படும் போது அங்குள்ள பாடசாலைகளைத் திறப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்வோம்.

**மீள்குடியேற்றப்படும் பகுதிகளிலுள்ள ஆசிரியர்களுக்கு விசேட கொடுப்பனவொன்றை வழங்குவதற்கு அரசு நடவடிக்கையெடுப்பதாகத் தெரிவிக்கப்படுகின்றது. இது தொடர்பாகக் கூற முடியுமா ?**

உங்கள் கதைகள்

# ஈரமான ரோஜா

**'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சியில் உங்கள் கதைகள் தொடர் நாடக வடிவில் இடம்பெற்று வருகின்றன. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒலிபரப்பாகும் நாடகங்களின் தொகுப்பை இப்பத்திரிகை வாயிலாகவும் உங்களுக்குத் தருகிறோம். கடந்தவாரம் இடம்பெற்ற 'ஈரமான ரோஜா' நாடகத்தின் சுருக்கம் இதோ:**



*லோஷினி*

லிங்கம்-ராசம்மா தம்பதியினரின் மகள் கார்த்திகா. அவர்களது சொந்த மண்ணில் வாழ முடியாத அசாதாரண சூழ்நிலையால் இடம்பெயர்ந்து செல்கிறார்கள். ஏங்குபோகிறோம் என்ற கோள்விக்கு பதில் தெரியாத பயணம்.

இதற்கிடையில் கார்த்திகா நடக்க முடியாத பாட்டியையும் அழைத்து செல்கிறாள். அந்த சந்தர்ப்பத்தில் காணப்பட்ட நிலமைகள் கார்த்திகாவிற்கு மன வேதனையை கொடுத்தது. ஒரு வழியாக அங்கிருந்து வாகனம் ஒன்றில் ஏறி செல்கிறார்கள். எதிர்பாராத விதமாக நடைபெற்ற வெடி விபத்தில் கார்த்திகாவின் தாயாரும் பாட்டியும் இறந்து விடுகிறார்கள். கார்த்திகாவிற்கு கவலையை விடவும் கோபம் தான் அதிகமாகிறது. தனது மக்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகளையிட்டு மனம் வெதும்புகிறாள் அவள்.

தொடரும் இடம்பெயர் பயணத்தில் ஏற்பட்ட கண்ணி வெடி விபத்தில் கார்த்திகாவிற்கு இரண்டு கண்களும் பாதிக்கப்படுகிறது. ஏதோ ஒரு வழியாக உறவினர் வீட்டில் தஞ்சம் அடைகிறார்கள். லிங்கத்திற்கு உடல் நிலை பாதிக்கப்படுகிறது. பார்வையிழந்த மகளின் எதிர்காலத்தை நினைத்து லிங்கத்திற்கு பயம் தொற்றிக் கொள்கிறது. கார்த்திகாவின் உறவுக்காரர் ராஜேஷ் இவர்களைப் பார்ப்பதற்கு வருகிறான். கார்த்திகா பற்றி எல்லா விடயங்களும் ராஜேஷிற்கு தெரியும். கார்த்திகா கண்ணி வெடித்தாக்கத்தால் தனக்கு பார்வை பறிபோனதை கூறுகிறாள்.

*"ராஜேஷ் கார்த்திகாவிற்கும் லிங்கத்திற்கும் எல்லா விதமான உதவிகளையும் செய்கிறான். கார்த்திகாவின் மன நிலையை சாதாரண நிலைக்கு கொண்டு வரும் எண்ணத்துடன் நடந்து கொள்கிறான்."*

ஆனால் தற்போது கண்ணி வெடி அபாயம் தொடர்பாக மக்களுக்கு விழிப்புணர்வூட்டும் வகையில் மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகளை நினைத்து சந்தோஷப் படுகிறாள். உயிரைப் பாதுகாக்க ஓடி வரும் மக்கள் கண்ணி வெடியில் சிக்கி உடல் அங்கங்களை இழந்து கொள்வது மிகவும் வருத்தத்திற்குரிய விடயம் என்று ராஜேஷிடம் தனது மன உணர்வுகளையும் ஏக்கங்களையும் பகிர்ந்து கொள்கிறாள்.

ராஜேஷ் கார்த்திகாவிற்கும் லிங்கத்திற்கும் எல்லா விதமான உதவிகளையும் செய்கிறான். கார்த்திகாவின் மன நிலையை சாதாரண நிலைக்கு கொண்டு வரும் எண்ணத்துடன் நடந்து கொள்கிறான். ஆனால் கார்த்திகா மாறுவதாக இல்லை. லிங்கத்தின் உடல் நிலை மிகவும் பாதிப்படைகிறது. இந்த நிலையில் கார்த்திகா ராஜேஷ் தன் மீது கொண்டுள்ள ஈடுபாடு பற்றி தெரிந்து கொள்கிறாள். ஆனால் அவரின் விருப்பத்திற்கு தன்னால் உடன்பட முடியாது என்று கூறுகிறாள். ராஜேஷ் தனது விருப்பத்தை நேரடியாக கூறுகிறான். கார்த்திகாவின் மனதில் முரண்பாடு. லிங்கம் தனக்காக திருமணம் செய்து கொள்ளும் படி கார்த்திகாவை வற்புறுத்துகிறார்.

எத்தனை முற்போக்கான சிந்தனைகள் இருந்தாலும் அவற்றை தனித்து செயற்படுத்துவதற்குரிய சுமுகமான சூழல் எமது நாட்டில் இல்லை என்பதை உணர்ந்து கொள்ளுமாறு ராஜேஷ் கூறுகிறான். கார்த்திகா தனது கொள்கைகள், தான் கடந்து வந்த பாதை, இழப்புகள் எல்லாவற்றையும் நினைத்துப் பார்க்கிறாள். தனது விருப்புகளுக்கு மதிப்பளிக்கும் ஒருவருடன் தன் வாழ்க்கையை பகிர்ந்து கொள்ளலாம் என்ற முடிவிற்கு வருகிறாள். லிங்கத்தின் விருப்பம் நிறைவேறுகிறது. கார்த்திகாவின் கனவுகள் நிச்சயமாக ஒரு நாளில் நிஜமாகும்.

## உங்களிடமிருந்து...

### பிரிவு

*பழகிப் பிரிந்து போகின்றேன்*
*என் அன்பை மறந்திடாதீர்கள்!*
*காலம் போடும் கோலங்கள்*
*கண்ணீர் சிந்தும் கவிதைகள்*
*சோகமே உருவான சங்கீதங்கள்...*
*நிழலான எனது வாழ்வு*
*நிஜமற்றுப் போய்விட்டன*
*மீண்டொரு பிறப்பெடுத்து*
*பள்ளித் தோழராய்*
*பாதம் பதிப்போம்...!*

**க. வாணி**
தரம் - 10
வீ. இல. 1491, வலயம் - 5
அருணாச்சலம் ந.பு.நி.

### கரைந்து போன நிகழ்வும் கலையாத நினைவும்...

முற்றத்து மாமரமும்
கிணற்றடிப் பலாமரமும்
உங்கள் வளர்ச்சி கண்டு
மனம் பூரித்துப் போனேன் - ஆனால்
நீரோ சரித்திரமற்றுப் போனீரே!
மீண்டும் அந்த மண்ணில்
உங்கள் வளர்ச்சி கண்டு
பயனடைய ஏங்குகின்றேன்...
அது என்றோ?

**வி. ராகவி**
அருணாச்சலம் ந.பு.நி.

### சிறகில்லாத பறவை

மூவிரண்டில் சிறகை விரித்தேன்
அப்பா தடுத்தார் குழந்தை என்று!
மூவைந்தில் சிறகை விரித்தேன்
அம்மா தடுத்தார் பருவப்பெண் என்று!
மூவேழில் சிறகை விரித்தேன்
அண்ணா தடுத்தார் மணமாகும் பெண் என்று!
மூவெட்டில் சிறகை விரித்தேன்
கணவர் தடுத்தார் குடும்பம் என்று!
மூபத்தில் சிறகை விரித்தேன்
குழந்தை தடுத்தது அம்மா..அம்மா..என்று!
முப்பத்தெட்டில் சிறகை விரித்தேன்
அப்போதுதான் உணர்ந்தேன்
நானொரு சிறகில்லாத பறவை என்று!

**ச. கஜிதா**
வீ. இல. 13
வலயம் - 32
இராமநாதன் ந.பு.நி.

### புரியவில்லை

*ஏதோ ஒரு பாரம்*
*மனதிற்குள் அழுத்தமாக!*
*உணரமுடியவில்லை ஏதென்று!*
*மூச்சில் கூட திணறல்...*
*வார்த்தைகளிலும் தான்!*
*சோகத்தின் ரணமொன்று*
*சோதனையின் சுமையொன்று*
*உணர்வுக்குள் பாரமாக!*
*கதறல் பாதி பதறல் பாதி*
*இன்னும் இன்னும்*
*எத்தனை நாட்களுக்கு?*

**ஜெ. ஜெனோஜினி**
தரம் - 10
வீ. இல. 5506
அருணாச்சலம் ந.பு.நி.

## மருத்துவக் குறிப்புகள் : வயிற்றோட்டம்



வயிற்றோட்டமானது உணவுத் தொகுதியைப் பாதிக்கும் ஒரு நோய் ஆகும். இந்நோயானது கிருமித் தொற்று ஏற்பட்ட உணவு மூலமோ, குடிநீர் மூலமோ அல்லது சுத்தமற்ற கையினால் உணவு உண்பதாலோ பரவுகின்றது.

இந்நோய் நெருக்கமான குடியிருப்புக்கள், பொதுக்கிணறுகள், சுகாதார வசதியற்ற மலசலகூடங்கள், பாதுகாப்பற்ற கிணறு அல்லது நீர்நிலை இருக்கும் இடங்களில் மிக வேகமாகப் பரவும். உதாரணமாக, அகதிமுகாம் அல்லது நிவாரணக் கிராமம்.

இந்நோயின் அறிகுறிகளாவன ஒரு நாளில் ஐந்துக்கு மேற்பட்ட தடவைகள் மலம் கழித்தல் ஆகும். இவர்களின் மலம் இளக்கமானதாகவும் நீர்த்தன்மையானதாகவும் இருக்கும். இதுவே இவர்களின் பிரதான முறைப்பாடாகும். இதைவிட இவர்களுக்கு வாந்தி, வயிற்றுவலி, காய்ச்சல், மலவாசலில் நோ என்பனவும் காணப்படலாம். அத்துடன் அவர்கள் மிகவும் சோர்வாகவும் இருப்பார்கள்.

இவ்வயிற்றோட்ட நோயின் முக்கிய பிரச்சினை உடலில் இருந்து பாரிய நீர் இழப்பு ஏற்படுவதாகும். அதுமட்டுமல்ல நீருடன் கனியுப்புக்களும் இழக்கப்படும். ஆகவே இந்நோய்க்கான பிரதான சிகிச்சை இந்நீர் இழப்பை ஈடுசெய்தலாகும். எம் உடலில் இருந்து இழக்கப்படும் நீரின் அளவை விட மேலதிகமான நீர் அவர்களுக்குக் கொடுக்கப்படல் வேண்டும். இதற்கு வாய் மூலமாக இளநீர், கொதித்தாறிய நீர், கஞ்சி, பழச்சாறு (தேசிக்காய்) என்பனவற்றையும் கொடுக்கலாம்.

இதைவிட சுகாதார நிலையத்தில் தரப்படும் ஜீவனி மீள்நிரப்புகை திரவத்தைப் பயன்படுத்தலாம். ஜீவனி பைக்கற்றினை ஒரு லீற்றர் கொதித்தாறிய நீரில் கரைத்து சுத்தமான போத்தலில் இட்டு வைக்கவும். இத்திரவத்தைக் கரைத்து 24 மணிநேரத்தினுள் சிறிது சிறிதாகப் பருக்கி முடிக்கவும். 24 மணித்தியாலம் அல்லது ஒரு நாளிற்கு மேற்பட்டால் அதனை ஊற்றிவிட்டு புதுக்கரைசலைத் தயாரிக்கவும்.

இம்மீள்நிரப்புகை திரவத்தை நாம் வீட்டிலும் தயாரிக்கலாம். ஒரு சுத்தமான கொள்கலனுள் 1 லீற்றர் நீரை எடுக்கவும். அதற்குள்,1 மேசைக்கரண்டி உப்பு, 8 மேசைக்கரண்டி சீனி என்பவற்றை இட்டு நன்கு கலக்கிய பின் பருக்கக் கொடுக்கவும்.

**இவ்வயிற்றோட்ட நோயின் முக்கிய பிரச்சினை உடலில் இருந்து பாரிய நீர் இழப்பு ஏற்படுவதாகும். அதுமட்டுமல்ல நீருடன் கனியுப்புகளும் இழக்கப்படும்.**

சிலவேளைகளில் வாய்மூலம் திரவம் எடுக்கும்போது வயிற்றைக் குமட்டல், வாந்தி வருதல் போன்ற அறிகுறிகள் ஏற்படலாம். ஆதலால் இதைச் சிறிது சிறிதாகப் பருக்கக் கொடுக்கவேண்டும்.

இதைவிட இவர்களுக்கு கடுமையான காய்ச்சல், மலத்துடன் சீதம், இரத்தம் போதல், மிகக் குறைந்த அளவு சிறுநீர் போதல், மிகச் சோர்வாகக் காணப்படல் போன்ற அறிகுறிகள் காணப்படுமாயின் உடனடியாக வைத்தியசாலைக்குக் கொண்டுசெல்லவும்.







மீண்டும் வாழ்வோம்(Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.



# பூந்தளிர்

எஸ்.பேல்லா டலிமா

**குறள் 11**

**வான்நின்று உலகம் வழங்கி வருதலால்**
**தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று**

**விளக்கம்:**
மழை பெய்வதனாலேயே உலக உயிர்கள் வாழ்கின்றன. ஆதலால் மழையே உயிர்களுக்கு அமிழ்தம் என்று உணரத்தக்கதாகும்..

## கண்டுபிடியுங்கள்

ஒரு சினிமாத் தியேட்டருக்கு 3 தாய்மார்கள் ஆளுக்கு இரண்டு பிள்ளைகளுடன் சென்றார்கள். அவர்களுக்கு 7 டிக்கட் மட்டுமே கிடைத்தது. இருந்தாலும் அது அவர்களுக்கு போதுமானதாக இருந்ததால் ஆளுக்கொரு இருக்கையில் இருந்து படம் பார்த்துவிட்டுத் திரும்பினார்கள். அது எப்படி?

**விடை**

பாட்டி ஒருவர். அவருடைய மகள்மார் இருவர், இருவருக்கும் ஆளுக்கு இரண்டு பிள்ளைகள், மொத்தம் 7 பேர்.

### பழமொழிகள்

*முகத்துக்கு முகம் கண்ணாடி*

*முக்காலும் காகம் முழுகிக் குளித்தாலும் கொக்காகுமா?*

*முதல் கோணல் முற்றுங் கோணல்*

*முத்தால் நத்தைப் பெருமைப்படும் மூடர் எத்தாலும் பெருமைப்படார்.*

*முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.*

*முன்கை நீண்டால் முழங்கை நீளும்.*

சிங்களம் සිංහල Sinhala | Let's COMMUNICATE கற்போம் Lesson 8

**பாடம் 8**

**உடல் உறுப்புக்கள்**
Parts of body
අපේ ශරීරයේ අවයව
அபே சரீரயே அவயவ

කට
**கட**
வாய் Mouth

ඇස
**அ(எ)ஸ**
கண் Eye

හිස
**ஹிச**
தலை Head

නාසය
**நாஸய**
மூக்கு Nose

කන
**கண**
காது Ear

# காலத்தினால் செய்த உதவி

சிங்கபுரி எனும் காட்டில் தன் பெற்றோருடன் ஒரு குட்டிக் கரடி வாழ்ந்து வந்தது. அது ஒரு நாள் காட்டில் விளையாடும்போது உயரமான மரம் ஒன்றில் தேன் கூடு ஒன்றைக் கண்டது. உடனே மிகவும் ஆவலுடன் மரத்தில் ஏற ஆரம்பித்தது. திடீரென்று அலறல் சத்தம் மரத்திலிருந்து கேட்டது. கரடி ஏறி நின்ற மரக்கிளையில் ஒரு பறவைக் கூடு இருந்தது. அதில் ஒரு தாய்ப் பறவையும் நான்கு குஞ்சுகளும் இருந்தன. கரடி இன்னும் சிறிது மேலே ஏறியிருந்தால் அந்த சின்னஞ் சிறிய கூடு உருத்தெரியாமல் சிதைந்திருக்கும். தாய்க் குருவி நடுங்கியவாறு பேசியது. அன்பான கரடி அண்ணா, நீங்கள் மேலே ஏறினால் என் கூடு சிதைந்து விடும். என் குஞ்சுகளும் இறந்துவிடும். அதை என்னால் தாங்கவே முடியாது என்று அழுதது. உடனே கரடி, 'அன்பான பறவையே, உன் மகிழ்ச்சியைவிட அந்தத் தேன் எனக்குப் பெரிதல்ல. நீ கவலைப் படாதே, நானே போய்விடுகிறேன்' என்று கூறி மரத்தைவிட்டு இறங்கியது. பறவை மகிழ்ச்சியுடன் நன்றி கூறியது.

சில நாட்களுக்குப் பின்னர் ஒரு நாள் குட்டிக் கரடிக்குக் கடுமையான வயிற்று வலி ஏற்பட்டது. எந்த மருந்துக்கும் வயிற்று வலி குறையவில்லை. காட்டில் இருக்கும் ஒரு அபூர்வ மூலிகையால் மட்டுமே கரடியைக் காப்பாற்றலாம் என்று அந்தக் காட்டின் பிரபலமான மருத்துவர் நரியார் கூறிவிட்டார். கரடியின் அம்மாவும் அப்பாவும் எல்லா இடத்திலும் தேடியும் அந்த மூலிகை கிடைக்கவில்லை. இதைக் கேள்விப்பட்ட பறவை காடு முழுவதும் தேடி ஒரு வழியாக மூலிகையைக் கண்டுபிடித்துக் கொண்டு வந்து நரியாரிடம் கொடுத்தது. மூலிகை சிகிச்சைக்குப் பின்னர் கரடி குணம் பெற்றது. கரடியும் அதன் பெற்றோரும் பறவைக்கு நன்றி கூறினார்கள். உடனே பறவை, 'கரடி நண்பன் அன்று எனக்கு செய்த உதவி அதைப் பொறுத்தமட்டில் சிறிதாக இருந்தாலும் அச்சமயத்தில் அது எனக்கு மிகப்பெரிய உதவியே. அதற்கு ஈடாகத்தான் இந்த உதவியை நான் செய்தேன்' என்றது.

***காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது***

**க. சுதர்சன்**
தரம் - 11வீ. இல. 1584
அருணாச்சலம் ந.பு.நி.

**சண்முகராசா கோடீஸ்வரன்**
தரம் - 8, வலயம் - 4, செட்டிக்குளம் ந.பு.நி.

**கோ. புஸ்பராணி**
தரம் - 11
வீ. இல. 2282
வலயம் - 8
அருணாச்சலம்
ந.பு.நி.

**து. அதிஸ்ரா**
தரம் - 12
வலயம் - 27
இராமநாதன்
ந.பு.நி.

**மு. நர்மதா**
தரம் - 4
வீ. இல. 67
வலயம் - 22
இராமநாதன் ந.பு.நி.

**செ. தேவயாழினி**
தரம் - 8
வீ. இல. 12
வலயம் - 3
இராமநாதன் ந.பு.நி.

**சி. தனுஷியா**
வீ. இல. 5845
வலயம் - 28
அருணாச்சலம் ந.பு.நி.

**வே. மதியரசி**
தரம் - 8
வீ. இல. 37
வலயம் - 22
செட்டிக்குளம் ந.பு.நி.

**த. துவேதா**
தரம் - 8
வீ. இல. 154
இராமநாதன் ந.பு.நி.

# கண்ணிவெடி கவனம்








**கண்ணிவெடிகள் குறித்து விழிப்புடன் இருங்கள்**

*இலங்கை அரசாங்கம், யுனிசெப் (UNICEF), ஐரோப்பிய ஒன்றியத்தின் மனிதாபிமான உதவிப் பிரிவு (ECHO), ஸ்பெயின் அரசாங்கம் என்பன இன்டர் நியூஸ் நிறுவனத்துடன் இணைந்து நடத்தை ரீதியிலான மாற்றங்களை உண்டுபண்ணுவதன் மூலம் கண்ணிவெடிகள் மற்றும் வெடிக்காத வெடிபொருட்கள் என்பன தொடர்பான உங்களது விழிப்புணர்வை அதிகரிக்கும் பொருட்டும் அத்தகைய பொருட்களிலிருந்து உண்டாகக்கூடிய அனர்த்தங்கள், காயங்கள் என்பனவற்றை குறைக்கும் பொருட்டும் 'கண்ணிவெடி கவனம்' (Mind the mines) என்ற தலைப்பில் கண்ணிவெடி அபாய கல்வியூட்டல் பிரச்சாரத்தை மேற்கொள்கிறது.*

*இலங்கையின் யுத்தம் நடைபெற்ற பகுதிகளில் சுமார் 1.5 மில்லியன் மிதிவெடிகளும் வெடிக்காத பொருட்களும் சுமார் 40 சதுர கிலோ மீற்றர் பரப்பளவில் பரவிக் காணப்படுவதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.*

*'விழிப்போடு இருப்போம் , வருமுன் காப்போம்'*

*இந்தப் பரப்புரைத் திட்டம் உங்களிடம் இருந்தும் கருத்துக்களை எதிர்பார்க்கின்றது. கண்ணிவெடிகள் தொடர்பான விழிப்புணர்வுத் திட்டம் எவ்வாறு உங்கள் வாழ்வில் மாற்றங்களை ஏற்படுத்தியது என்பது குறித்து எங்களுக்கு எழுதி அனுப்புங்கள்.*



**ஆசிரியர்**
**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**

## பிரயாணத் தகவல்கள்

**ஒரு பாதை பாதுகாப்பற்றது என நீங்கள் கருதினால் அந்தப் பாதையில் பயணிக்காமல் பாதுகாப்பான பாதையைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்துங்கள் அல்லது வந்த வழியே திரும்பிச் செல்லுங்கள். கைவிடப்பட்ட இராணுவக் காவலரண்கள், சோதனைச் சாவடிகள், அகழிகள், பாலங்கள், மற்றும் ஆற்றங்கரை போன்ற பகுதிகளுக்குச் செல்லும் போது எச்சரிக்கையாக இருங்கள்.**






**முடியுமானவரை பகற்பொழுதுகளில் பயணியுங்கள். கண்ணிவெடி எச்சரிக்கைக் குறியீடுகள் இல்லாத இடங்கள் அனைத்தும் அபாயமற்றவை/பாதுகாப்பானவை எனக் கருத வேண்டாம். ஒரு பாதை பாதுகாப்பற்றது என நீங்கள் கருதினால் அந்தப் பாதையில் பயணிக்காமல் பாதுகாப்பான பாதையைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்துங்கள் அல்லது வந்த வழியே திரும்பிச் செல்லுங்கள்.**

**சந்தேகத்திற்கிடமான பொருட்களைக் கண்டால் பின்வரும் நிறுவனம் ஒன்றிற்கு அறிவிப்போம்.**

| வவுனியா மாவட்டம் | மன்னார் மாவட்டம் |
|---|---|
| CTF: 024 222 1127 | CTF: 023 222 2501 |
| DMAO: 024 222 4214 | DMAO: 023 222 2235 |
| SLA: 011 306 1231 | SLA: 011 306 1231 |
| MAG: 024 3243451 | MAG: 023 224 3451 |
| Sarvatra: 024 492 0206 | Sarvatra: 024 492 0206 |
| Horizon: 024 224 8150 | Horizon: 023 223 3055 |

FSD: 024 458 9059 / 024 222 0052 / 024 324 5737

DDG: 024 324 8214

UNICEF: 024 222 3485

யாழ்ப்பாணம் மாவட்டம்
The HALO Trust:
021 320 5339

தங்கள் பகுதியிலுள்ள கிராம சேவை அலுவலர், பாதுகாப்புப் படையினர் ஆகியோருக்கும் தெரியப்படுத்துங்கள்

நீர் இன்னமும் உயிருடனிருப்பதையிட்டு நாங்கள் மிக்க மகிழ்ச்சியடைகிறோம். நீரும் மற்றவர்களைப் போல வாழமுடியும்.. மீண்டும் பாடசாலைக்குப் போய் உமக்கு சந்தோஷத்தைத்தரக்கூடியவற்றை செய்யும்.

இனி என்னால் ஓடவோ, விளையாடவோ முடியாது...நான் எவ்வாறு சந்தோஷமாயிருக்க முடியும்..

**கண்ணிவெடியினால் தனது ஒரு பாதத்தை இழந்த ரூபியைப் பார்க்க சுகாதாரப் பணியாளர் வீட்டுக்கு வருகிறார்.**

# மீள்குடியேற்றப் பகுதிகளை மிதிவெடிகளற்ற பகுதிகளாக உறுதிப்படுத்த பொதுமக்களின் உதவி தேவை

கண்ணிவெடி அபாயங்களற்ற பகுதிகளாக மீள்குடியேற்றப் பகுதிகளை உறுதிப்படுத்துவதற்கு சர்வோதய நிறுவனத்திற்கு பொதுமக்களின் ஒத்துழைப்பு தேவையாக இருக்கின்து. 'கண்ணிவெடியகற்றும் நிபுணர்கள் பொதுமக்களின் முழு ஒத்துழைப்பைப் பெற்றுக்கொள்ள முடிவதில்லை. காரணம் மக்கள் தமது நிலங்களைச் சுற்றி பாதுகாப்பிற்கென இடப்பட்டுள்ள எச்சரிக்கைக் குறியீடுகளையும் வேலிகளையும் நீக்கி விடுகின்றனர். எனவே கண்ணிவெடியகற்றுபவர்களுக்கு மக்கள் எவ்வாறு ஒத்துழைப்பு வழங்க முடியும் என்பது பற்றி அவர்களுக்குத் தெரிவித்து வருகின்றோம். மக்கள் தமது பூரண ஒத்துழைப்பை வழங்கினால் மிக விரைவில் யாழ்.மாவட்டத்தை மிதிவெடிகளற்ற பிரதேசமாக்க முடியும்' என யாழ்.மாவட்டத்திற்கான சர்வோதய நிறுவனத்தின் கண்ணிவெடி அபாயக் கல்வித் திட்டத்தின் ஒருங்கிணைப்பாளரான நாகவதனி சிவசுப்ரமணியம் தெரிவித்தார்.

சர்வோதய நிறுவனம் யாழ்ப்பாணம், மட்டக்களப்பு மற்றும் அம்பாறை மாவட்டங்களில் 250 தொண்டர் ஊழியர்களின் உதவியுடன் கண்ணிவெடி அபாயக் கல்வித் திட்டத்தினை முன்னெடுத்து வருகின்றது. (UNDP இனால் யாழ்.மாவட்டத்தில் முன்னெடுக்கப்படும் கண்ணிவெடி செயற்திட்டத்தினை இங்குள்ள வரைபடத்தில் காணலாம்)

**எவ்வாறு நீங்கள் உதவ முடியும்?**

அசாதாரணமாகத் தென்படுகின்ற பொருட்களை தொடவோ அவற்றை நீக்கவோ முற்பட வேண்டாம்

சில எச்சரிக்கைக் குறியீடுகளும் போரின்போது பயன்படுத்தப்பட்ட வெடிபொருட்களும்

- காயப்பட்ட அல்லது இறந்த மிருகங்கள்
- பாதியாகக் காணப்படும் கண்ணிவெடிகள்
- வெடித்த வெடிபொருட்களின் எச்சங்கள்
- தரையில் பாதச் சுவடுகள் இன்மை
- நீங்கள் ஏதேனும் எச்சரிக்கைக் குறியீடுகளைக் கண்டால் ஏனையவர்களை அங்கிருந்து அகன்று செல்லும்படி எச்சரியுங்கள்.
- இராணுவத்தினர், பொலிஸ், கண்ணிவெடியகற்றும் நிறுவனங்கள், சமூகத் தலைவர், பெரியவர்கள், குடும்பத்தினர் போன்றோருக்குத் தெரியப்படுத்துங்கள். (தொடர்புகொள்ள வேண்டிய தொலைபேசி இலக்கங்கள் கீழே தரப்பட்டுள்ளன.)
- அபாயகரமான பகுதிகள் என தெரிவிப்பதற்கு வைக்கப்பட்டுள்ள எச்சரிக்கைக் குறியீடுகளையும் தடுப்பு வேலிகளையும் நீக்க வேண்டாம்.

**யாழ். மாவட்ட கண்ணிவெடி அகற்றல் செயற்பாட்டு விளக்கப்பட வரைபு (01 ஜனவரி 2010)**




இப்பத்திரிகை எக்ஸ்பிரஸ் நியூஸ்பேப்பர்ஸ் (சிலோன்) லிமிடெட்டாரால் கொழும்பு - 14, கிராண்ட்பாஸ் வீதி, 185ஆம் இலக்கத்தில் 2010ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 17ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை அச்சிட்டு வெளியிடப்பட்டது.